உ

கணபதிதுணை

கௌரிமாயூரமென்று வழங்கும்

# திருமயிலைத்திரிபந்தாதி.

ஷை கௌரிமாயூரம்

## இராமையர்

அருளிச்செய்தது.

---

இது

சோழமாளிகை ம-ள-ள-ஸ்ரீ

**இரத்தினம்பிள்ளையவர்கள்**

விருப்பத்தின்படி

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

கும்பகோணம்:

"லார்ட் ரிப்பன் அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டது.

---

சருவசித்துஸு பங்குனிமீ.

# சிறப்புப்பாயிரம்.

கயிலையொன் றீச னருள்பெற வேண்டிக் கலித்துறையான்
மயிலையந் தாதி யொருநூறு செய்யுள் வகுத்தணிந்தான
சயிலவன் றேன னிலக்கண மாகத் தமிழ்க்குறுமைர்
தியலையுந் தேரு மறையோன் மயிலை யிராமையனே.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## கௌரிமாயூரமென்று வழங்கும்

# திருமயிலைத் திரிபந்தாதி.

### காப்பு.

உருகும் பசும்பொற் சடையார் மயிலை யுறை வள்ளன்மேற்
பெருகும் பயன்பெறு மந்தாதி பாடப் பிரசாதகன்பால்
வருகும்ப மாமுனி பூசைகொண் டுளை மகிழொருகோட்
டிருகும்ப மும்மத நால்வாய்க் களபத்தை யேத்துதுமே.

——:O:——

### நூல்.

பூமனை யானையு மாயோனை யுந்தந்த பூங்கடுக்கைத்
தாமனை யானை வனையுந் துவசனைச் சங்கரிசேர்
வாமனை யானை பதனுடை யானை மயிலையிற்செந்
தேமனை யானை மனமே நினைவினை திருதற்கே. (௧)

கேதத்து வந்தனை மாறப் படவத்திற் கிடந்துழலு
நீதத்து வந்தனை யாப்பத்தே மயிலை நிமலர்மலர்ப்
பாதத்து வந்தனை செய்தனை யேற்பல வாருசனனை
பேதத்து வந்தனை பாற்பிற வாகம வொழிநெஞ்சே. (௨)

நெஞ்சத் திருக்கை யடுத்தென் வினைவுக்கு நின்சரணக்
கஞ்சத் திருக்கை யளித்தாளு வாய்வெங் கடுவைவிண்ணோர்
கெஞ்சத் திருக்கையி லேற்றயின் றேய்ந்தண் கிடங்கிலன்ன
மஞ்சத் திருக்கை குதிபாய் மயிலையி லற்புதனே. (௩)

அற்பக லாமதி காந்திச் சிகரமு மற்புதமாஞ்
சிற்பக லாமதி லுஞ்சேர் மயிலைச் சிவன்பொருப்பிற்
சொற்பக லாமதி வாணுத லாயுண்மை சொல்லுதிநின்
கற்பக லாமதி மாலுற்ற போலுமிக் காவலர்க்கே. (௪)

காவியம் பொன்று மதனேவு முன்னங் கரியகுயிற்
கூவியம் பொன்று தலைநல்கு மாமலன்று கோதையுமோ
ராவியம் பொன்றுகண் ணீர்மல்கு மாளிகை யாவணத்தின
மேவியம் பொன்றவைத் தேகு மயிலையில வித்தகனே. (௫)

வித்துரு மத்தியல் பற்றித முளா விரும்புமைந்து
சத்துரு மர்த்தியஞ் சாருமென் னெஞ்சன் சரண்பற்றுமோ
முத்துரு மத்திய வண்ணப் பொறிகொண் முகத்துமுகி
லொத்துரு மத்தியன் றீர்ந்தாட் மயிலையி லுத்தமனே. (௬)

உத்தர கங்கையி னோங்கிய பொன்னி புறமயிலை
யத்தர கங்கையில் வெண்டலை யேந்திய வையர்முக்க
ணித்தர கங்கை தவமறு பத்திநி றைந்திடுசை
வத்தர கங்கையி லைக்கிரி நான்மறை மத்தகமே. (௭)

மேதகி மாலைய நங்கைபங் கார்வளை விற்பிடித்து
மூதகி மாலைய நாணம் பெனக்கொண்டு முப்புரங்காய்
தாதகி மாலையர் தென்மயி லைப்பதிச் சங்கரர்க்கிய
பாதகி மாலை யனமேசென் றேதிற டலனுனக்கே. (௮)

பலதாரங் கந்த மலர்கொண் டரிபணி பாதர்தில்லை
யலதாரங் கந்தண் மயிலையி லொன்றுகொண் டாடுமையர்
சலதரங் கந்தவ ழுஞ்சடை யார்வரைக் கையலுக்குச்
சொலதரங் கந்தர மாதுஞ் சுகங்கிஞ் சுகங்சமுகே. (௯)

சுகத்தினங் தத்துவண் காவார் மயிலையிற் றூயன்மத
முகத்தினங் சத்துவக் கன்றரித் தோனுமை காணவிந்தச்
சகத்தினங் கத்துவங் தாடும்பி ரான்றனைத் தள்ளிச்செய்த
மகத்தினங் தத்துவ ருந்தின மாக்கினன் மாமனுக்கே. (௧௦)

மாயூர நாத மயிலையி லீச வரிபாரவக்
கேயூர நாதசொ ரூபாவென் னெஞ்சமுன் கிஞ்சுகத்தாள்
மீயூர நாதசன் மாவணங் கற்புத வெவ்வினையா
னேயூர நாதனை நீயருட் கண்கொண்டு நோக்குகவே. (௧௧)

வேதாக மத்தந்த மேவுமத் தாபலி வேண்டியன்று
வேதாக மத்தந் தனிற்சேர் மயிலை விமலவெம்பொற்
போதாக மத்தந் தரித்தோய் கருணை புரியுயிர்போம்
போதாக மத்தந் தமர்மீதி லாசையைப் போக்குவித்தே. (௧௨)

போக்கவ ராதியை காமா தியைநின் புகழ்ப்பெயரை
நாக்கவ ராதியல் பாநன் னெறியி னடக்கவரா
தாக்கவ ராதிய ரூர்காய் மயிலையி லுத்தமனே
நீக்கவ ராதி யெனினுஞ் சரண்புகென் னீள்வினையே. (௧௩)

நீளா வணங்க ணெருங்கு மயிலை நிமலவுனக்
காளா வணங்கல ரையினுந் தொல்லை யடியனென்றே
மீளா வணங்கணல் வெவ்வினை தீர்த்தினி மேற்பிறந்து
மாளா வணங்கரு ணைப்பார்வை யென்மிசை வைத்தருளே.

வைத்தச னங்கள் பெறும்பணி பூணு மயிலைப்பிரான்
பத்தச னங்கரு தும்பான் வெற்பிற் பவளச்செவ்வாய்ப்
புத்தச னங்களர் தற்குறல் வேலையிப் போதென்கொலோ
சித்தச னங்களை யன்னீ ருமது திருவுள்ளமே. (௧௫)

திருமயி லைப்பதி யைப்பிறை மோலி திகழ்வள்ளலும்
பொருமயி லைப்பதி கண்ணஞ்சன் மாதும் பொருந்திவைகும்
பெருமையி லைப்பதி தன்சே ரினுமுத்திப் பேறவனுக்
கருமயி லைப்பதி னெண்பதி புக்குமங் காவதென்னே. (௧௬)

ஆவினி லாவந்தி வந்தா லெனக்கணங் கேயதன்பின்
பாவினி லாவந்திவ் வூரிலென் செய்யும் பயிணைமென்று
காவினி லாவந் தியங்கி யுறங்குங் கவின்மயிலைக்
கோவினி லாவந் தினம்பெறு நீத்தெறி கொன்றையுமே (௧௭)
[லைக்

கொன்றத்தி யங்கதன் றேல்போர்த்த மெய்யனெங் கோன்மயி
குன்றத்தி யங்கவ் வணங்கையன் பன்கொடிங் காணின்மென்
கன்றத்தி யங்கம னங்கொடு செல்கின்ற காரணத்தா [றுள்
லின்றத்தி யங்கலி போலெம ராலித்தி ரங்குவரே. (௧௮)

இரவல ராவண சத்தையிங் கேரக் கிதழ்திறந்து
உரவல ராதவ ராகுவ ரோபொற் சரோருகத்தின்
விரவல ரார்குழன் மின்னேயெவ் வாறிங்கு மேவினைநீ
குரவல ராவணி தோளார் மயிலை யுயர்வரைக்கே. (௧௯)

உயரையி ராவண வாகனத் தோன்முக லும்பருற்ற
துயரையி ராவண நீக்கவி ராமனைத் தோற்றியிலங்
கயரையி ராவண ஞேடு வதைப்பித்த கார்க்களத்தெண்
புயரையி ராவண நீள்கா மயிலையிற் போற்றுநெஞ்சே. (௨௦)

சேவாக னத்தன் மயிலையி லீசன் சிவையொருபான்
மேவாக னத்த னருளுஞ் செயுநல் வினையுமன்றிச்
சாவாக னத்தம் வரினெஞ்ச மோநந் தமைப்பரிந்து
காவாக னத்த பொருளுங் கிளையுங் கலன்களுமே. (உக)

கலசங் கரிக்கும்ப மென்னுந் தனக்கங்கை காந்தர்வரைக்
குலசங் கரிக்குங் கொழுநர்கற் பாந்தங் குறுகிலண்டம்
பலசங் கரிக்கும் பரனூர் பிரமன் பணிமயிலைத்
தலசங் கரிக்கு மதனைவென் றோர்பர தத்துவமே. (உஉ)

துவள வளைக்கும் வளைவில்லர் பொன்னித் துறையிலெங்குர்
தவள வளைக்குல முத்தீன் மயிலைத் தடவளைவாய்ப்
பவள வளைக்குழைக் காதோ டிகல்விழிப் பாங்கியெனு
மிவள வளைக்குறி மேவற்கு வாயி லினிநமக்கே. (உங)

இனியன கைக்கு மிளநில வங்கி யெனச்சுடுமென்
சனியன கைக்கும் வளைகணில் லாவெனுந் தையலைத்தாய்
முனியன கைக்குமிவ் வூர்தணிப் பாயிவண் மோகத்தைநீ
தனியன கைக்கும ணாளா மயிலையிற் சங்கரனே. (உச)

சங்கத்தி னந்தவழ் செய்சூழ் மயிலைத் தலத்துறைவோர்
பொங்கத்தி னந்த வரித்தார் வளையில்வின் பூவையர்தம்
மங்கத்தி னந்த மிலரோ தவரு மவர்கனிவாய்
நங்கத்தி னந்தவஞ் செய்யார் கிடைத்திடி னும்மீதமே. (உரு)

நமருக மானனை யார்தந்த காமவெந் நோயுளைத்தல்
கமருக மான திணிமட லேகதி காணயரு
ரமருக மான வரிக்கொரு நாளென் றமைத்துவைத்த
தமருக மானமர் கையார் மயிலைச் சயிலமின்னே. (உசு)

மின்னக ரும்பணி பூண்டமின் னேமலர் வேண்டுதிபோற்
பொன்னக ரும்பணி தென்னூர் மயிலைப் புனிதர்வெற்பிற்
பன்னக ரும்பணி கேட்குந் தகைத்துப் படுத்தபனை
யன்னக ரும்பணி யொன்றுகண் டேனங் கணுகற்கவே (உஎ)

கற்பம ருங்கலை யென்றே குதலொழி காண்மயிலைச்
சற்பம ருங்கலை யாறுந் தரித்த சடிலர்வெற்பா
பொற்பம ருங்கலை கொள்வாணி ராமனைப் போதியென்ற
சொற்பம ருங்கலை சீதைமுன் னுற்ற துயர்பெரிதே. (உஅ)

துயருந்தி யங்குயில் கூவமென் றங்கை துணைச்செவிபோர்த்
தயருந்தி யங்கு மழுமாவிம் மானுக் கருள்கிலையா
லுயருந்தி யங்கசப் பன்மந்தி காவி னொழுகுமது
வையருந்தி யங்குண் மயங்கு மயிலை மழுவலனே. (உகூ)

வலவரு மைக்கு மருகர் மலைக்கு மயிலையன்னா
குலவரு மைச்சும ரற்கையர் நன்மலர் தொண்டிவிண்ணோர்
பலவரு மைக்குல வாகன னும்பணி பாசர்பெயர்
சொலவரு மைக்குழ லிந்திரை கேள்வன் றுணைத்தனமே. (௩0)

தனங்காத் திரமைய நுண்ணிடை சைவலங் காரளக
மனங்காத் திரமை யரிக்கண் முகமம் புயமதிமோ
கனங்காத் திரமைய செய்யார் மயிலைக் கடவுள்வெற்பிற்
புனங்காத் திரமை யமைந்தாங் கிருந்தவப் பூங்கொடிக்கே. ()

பூங்காவி யம்புகள் வேள்விடும் போதுயிர் போங்கணையிற்
றேங்காவி யம்பு கவிழ்ந்தாங் கெனவிவள் செய்திதையீ
பாங்காவி யம்புக வண்டே மனையிற் பழகுகிள்ளை
தாங்காவி யம்புகன் மாமயி லைப்பரன் சந்நிதிக்கே. (௩௨)

என்னத்த னாகச் சமர்க்கெய்து மாரன் சரங்களைந்து
மென்னத்த னாகத் தெழுந்திங் கனுமெனை யென்செயுங்கா
லன்னத்த னாக சயனத்த னேத்து மரன்மயிலை
மன்னத்த னாகத்து மாலையு மாலைக்குள் வந்திடினே. (௬௩)

வந்தநஞ் சாரலின் மையுறு கண்டர் மயிலைவெற்பி
லிந்தநஞ் சாரலி லெண்ணில ரோமுன் னிரந்தவர்கோ
லிந்தநஞ் சாரலின் மெய்த்தவஞ் செய்யினு மேவரிதா
நந்தநஞ் சார லிவர்க்கெளி தாகவென் னேற்றனரே. ௬௪)

நோகாம னம்புனல் சோரா விழிமதி நோவியற்று
மாகாம னமபு வருத்தாது தென்றல் வரினுமெய்க்கு
வாகாம னமபுகுஞ் சேயாசூழ் மயிலையில் வள்ளல்வந்து
நீகாம னமபுதி நீத்தாங்கி யான்றுயர் நீத்தபின்னே. (௬௫)

பின்னலங் காரள கத்தழ கும்பிறை போனுதலு
முன்னலங் கார முலைகளுந் திங்கண் முகமுங்கொண்டே
தென்னலங் காரணி யேளார் மயிலைக்க ணின்றவந்த
மின்னலங் கார வுருவின்று தோன்றும் வெளியெங்குமே.

எங்கும கந்தணி வந்தனை னும்பெய ரோதுவையீர்
குங்கும கந்த முலையீர் சொலிற்றுறை வாங்கொலென்பார
றங்கும கந்தவிர்த் தாம்வார் றனைமயன் றந்த தகைகண்செய்த
பொங்கும கந்தகாத் தார்தேன மயிலைப் பொருப்பிடத்தே.

பொருந்தா ரணியெயில் காய்ந்தோன் மயிலைப் புனிதன்வெற்
முருந்தா ரணிநகை மொய்குழற் பேதை முலைவிலைக்கா [பின்
விருந்தா ரணிபுயமனைவை நீபுரக் கின்றனிந்தப்
பெருந்தா ரணிமுழு தந்தரி னும்பெறும் பேறலவே. (௬௮)

பேரம ருந்துங்க ளம்புபட் டாகம் பிளப்பட்டோய்
தீரம ருந்துங்கள் செவ்வா யமுதன் றித் தீங்கரும்பின்
சாரம ருந்துங் கனிமந்தி தாவுந் தனிமயிலை
யூரம ருந்துங்கர் வெற்பணங் கேபிறி தொன்றிலையே. (௩௯)

இலைய மலைக்கு மனமுற யோகத் திருக்கவல்ல
மலைய மலைக்குறு மெய்த்தவன் போற்று மயிலைவள்ளல்
கலைய மலைக்குங் கவின்முலை வேற்கட் கரும்புருவச்
சிலைய மலைக்கும ணாளருண் டென்பயந் தீர்ப்பதற்கே. (௪௰)

தீக்குவித் தாரநெய் பெய்த லிவட்கிழுஞ் செய்தலென்று
வாக்குவித் தாரமு ணைப்பார லாற்சக வண்பயிலா
யாக்குவித் தாரம் மயிலைவள் ளற்குளைத் தாகுலமார்
நீக்குவித் தாரவ ரோதாய வொன்றுகண் ணீர்பெய்யுமே. ௪௧)

பெய்யற் கெழுதரு கார்க்கந் தரத்தெம் பிரான்மயிலைத்
தைய்யற் கெழுதரு நேரிடை யற்பந் தபோதனரு
மையற் கெழுதரு ணத்தன பாரம் வளைச்சிகர
மெய்யற் கெழுதரு லக்கிட்ட மாலம் பிருகண்களே. (௪௨)

இருமந் தரவளைக் கொங்கைநல் லாள்குயி லின்னிசைகேட்
டொருமந் தரவயி ரொர்ப்பதற் கங்க மொடுங்கியுள்ளக்
தெருமந் தரவ மளைபுகுந் தாங்குத் திகைத்திடுமோ
சருமந் தரவண் மயிலையத் தாபுபத் தாமருமோ. (௪௩)

அருமருந் தாருவ திற்பல னேதென் றதனைடச்சே
வருமருந் தாருன் மணிவா யமுதுணின வள்ளல்லைக்கு
தருமருந் தாரு நிகர்கா மயிலைத் தயருமுள்ளாந்
தெருமருந் தாருணி யம்பெற்ற தேமொழி சித்தமியே. (௪௪)

சித்தரி லேகர் தினந்தாழ் மயிலையிற் சிற்பரபொன்
கைத்தரி லேகநற் பட்டுடை நீக்குங் கணிகையர்ச்சேர்
பித்தரி லேகணிக் கப்படும் யானும் பெறுகுவனே
பத்தரி லேக னிவனென்று நோக்குநின் பார்வையையே. (சரு)

பாரத்த னத்தினங் சொல்லைக் கிவர்பல கால்வரனின்
சாரத்த னத்தினன் றேவரிந் தேமின்று தண்டடத்தின்
நீரத்த னத்தினஞ் சேர்ந்துவந் தாடுந் திருமயிலை
பூரத்த னத்தினஞ் சண்டான் வரையிலுன் றுள்ளுறைநீயே. ( )

உள்ளக் கவலையி னுடுகின் றேன்மக ளோர்க்குச்சென்ற
கள்ளக் கவலை யறிகில வீவிருங் கண்டிலிரோ
வெள்ளக் கவலைய மார்த்தார் மயிலை விமலர்வெற்பில்
வள்ளைக் கவலையின் மாந்தளா மாட்டு மறத்தியரே. (சஎ)

மறந்திருப் பாரல ருன்னைநின் மேல்வைத்த வாஞ்சையினைத்
துறந்திருப் பாமனங் கொள்ளா ரிரசஞ் சுடரவன்றென்
புறந்திருப் பாமுன் வருவார் மயிலைப் புனிதன்வெற்பிற்
றிறந்திருப் பாவையொப் பாய்விடை நீகொடு செல்பவர்க்கே

செல்வினஞ் சார வுயர்கா மயிலைச் சிவன்சயில
வில்வினஞ் சாரவி காரன் பொருப்பின் மெலிமருங்குல்
வல்வினஞ் சாரலஞ் சோலையிற் புள்ளொலி மல்குமுன்போ
லல்வினஞ் சார்தற் கேதுவைச் சென்றறி யத்தகுமே. (சகூ)

தகவிலை யம்புகுந் தாரெணி னும்பெருந் தன்மையுள்ளார்
நகவிலை யம்பு தொடவளைத் தார்கடை நாளிலிந்தச்
சகவிலை யம்புரி வார்வளை முத்தந் தடவனசத்
தகவிலை யம்பு நிகர்க்கு மயிலை யமர்பதியே. (ருO)

பதியனந் தங்கள் பெறினு மயிலைப் பதியகலா
முதியனாந் தங்கடந் தாடும் பரமன் முராரிதுணைக்
கதியனந் தங்கயன் காண்பரி யான்பொற் கழல்பணிவோர்
நிதியனந் தங்கம லம்பெற்று வாழ்வர் நிகரின்றியே. (௫௧)

நிகரதி கந்தனக் கில்லார் மயிலை நிருபர்குல
சிகரதி கந்தத் தொலிபோக்கி நீமணஞ் செய்கைநன்றாற்
புகரதி கந்தக் குழற்பேதை யோடிமிப் பூம்பொழிற்கட்
சுகரதி கந்தர்ப்ப வேள்வியைச் செய்யத் துணிகின்றதே. ()

துணிப்பா யலையக லாசையை யாக்கையைத் தோலெலும்பின்
பிணிப்பா யலையகப் பிண்டமென் றெண்ணலை பேதமறக்
கணிப்பா யலைபக மேயெங்ங னுய்வை கருதுகிலை
பணிப்பா யலைபக லான்றாழ் மயிலைப் பரமனையே. (௫௩)

பரசமை யத்தர் பணிதெய்வ மாயுநிற் பாய்பிரமன்
சிரசமை யத்த மயிலையி லீச சிலம்புசவு
மிரசமை யத்தத ரத்துமை யோடெம்வந் தித்தனுபுங்
குரசமை யத்தப யந்தமி யேற்குக் கொடுத்தருளே. (௫௪)

கொடுங்கால னுங்குன் றமோதினர்மாபயங்கொண்டுவிண்ணோர்
நடுங்கால னுங்கும்பி ரானார் மயிலையி னங்கைநின்க
ணடுங்கால னுங்குமென் காதல்கண் டன்பி னணைந்ததனா
னெடுங்கால னுங்குல மும்வாழி யாயமு நீயுநன்கே. (௫௫)

நன்கொடிச் சிக்கை யருந்தரி சேப்க்குற்ற நாகவல்லி
மென்கொடிச் சிக்கை விடுக்கு மயிலை விமலர்வெற்பி
கொன்கொடிச் சிக்கை புரிக்காய் தினையுண் டிலையுடுக்கும்
பு கொடிச் சிக்கைய நின்போல் பவர்க்கிது பொற்பலவே. )

யொற்பங் கனைய வழல்பெயுந் திங்களும் பொருதெனமீகோர்
கற்பங் கனையடங் காகட லென்று கலுழுமிக்கின்
முற்பங் கனைய மொழியாண் மயலை மொழியனரோ
வெற்பங் கனையமர் பங்கார் மயிலையில் வித்தகர்க்கே. (ருஎ)

தகர மருக்குழ லாண்மதன் போர்க்கன்றித் தாயர்வசை
பகர மருக்கு மயர்வெய்து மோபல கோபுரத்தின்
சிகர மருக்கன் பதச்தொட வோங்குந் திருமயிலை
நகர மருக்க மொசிக்குந் தனைத்துணை நாயகனே. (ருஅ)

நாயக மானக ரங்களுக் கம்புய நாயகிக்குந்
தாயக மானக மேமுதற் பல்லியஞ் சார்ந்ததென்று
தூயக மான கனகா விரிநதி சூழ்ந்தநூமாற்
சாயக மானக வில்லார் மயிலைத் தனிநகரே. (ருகூ)

தனத்துக்க மைந்தகல் வெந்நீர்க் குளியுந் தவலைசெங்க
யினத்துக்க மைந்தமை யுள்ளமு நீங்கல வெண்கலைனைச்
சினத்துக்க மைந்தல செய்தார் மயிலைச் சிலம்படித்தென்
மனத்துக்க மைந்துநின் ஞேசம் பிறந்து வளர்கின்றதே. (சுO)

வளமலி னந்த வனமயி லைப்பரன் மார்க்கண்டனை
யுளமலி னந்தக னீர்ப்பவென் றேன்வெற்பி லும்பர்தந்தா
வளமலி னந்த முறினும்பொய் யாதசென் வாய்மைநின்குந
தளமலி னந்தவ ளஞ்சாரி னுந்தவி ரேனினையே. (சுக)

நினையா வருந்துய ரெய்திவெப் போதுங்க ணீரிற்கொய்கை
நனையா வருந்துமிந் நங்கைதன சோகமுன் னல்வரத்தாற்
றனையா வருந்துதி செய்யநின் றேன்வயற் றண்கரும்பைச்
சினையா வருந்து மயிலைவெற் பாவின்று தீர்ந்ததுவே. (சுஉ)

நீரத்தன மாதங்க மாய்த்தோன் மயிலைச் சிலம்பிற்பொன்னை
வார்த்தன மாதங்க நந்தமங் கத்துற மார்பிலவ
ரேர்த்தன மாதங்க வேற்பூ டுருவ விருகையினன்
கார்த்தன மாதங்க மேதரு மாலின் றகற்றினமே. (சுந)

அகலாக வம்புரி முப்புரத் தோரை யடுவதுதன்
னகலாக வம்புவித் தேராதி யுத்தசன் ளுகமெலா
மிகலாக வம்புனைந் துட்கும் படிவென்ற வீரருக்குப்
புகலாக வம்புயச் செய்சூழ் மயிலைப் புரமென்பரே. (சுச)

என்பர வத்தணி பூண்டார் கவுரி யெழின்மயிலாய்
முன்பர வத்தர் மயிலைக்கு நான்செலு முன்வலவா
வன்பர வத்தண் முகிலேகு மேலந்த வஞ்சியுந
மன்பர வத்தர்கொலென் றெண்ணிநெஞ்சுநொந் தஞ்சுறுமே (சுரு)

அஞ்சுகந் தங்குல மென்றெய்து நீவிரிங் காயலென்று
னஞ்சுகந் தங்குழை தோய்விழி கண்டுழை நண்ணுறுமால்
விஞ்சுகந் தங்குல வுங்கா மயிலை விமலர் வெற்பி
னெஞ்சுகந் தங்குறை நீர்புனங் காக்கின்ற நீதிநன்றே. (சுசு)

நீதி னடந்தமை வுற்றநற் றூபதர் நெஞ்சுறைவோ
ளுதி னடந்தமி லான்மயி லைப்பர னன்றுமன்றுட்
கோதி னடந்தக வாடினன் வெற்பினிற் கூர்விழிதோய்
காதி னடந்த கடுங்காம வெள்ளங் கடக்கரிதே. (சுஎ

கடனஞ் சமுகந்த கண்டனுங் காமனைக் காய்ந்தவனு
நடனஞ் சமுகந் தருக்குறச் செய்திடு நாதனும்போ
திடனஞ் சமுகந் தனிலொன்றை யீர்ந்திடு மேக்தனும்பார்ப்
புடனஞ் சமுகந்த செய்சூழ் மயிலை யுறையரனே. (சுஅ)

அரவா ரலங்க லணிந்தோன் மயிலை யமலனுதற்
பரவா ரலங்க ளுடையோன் வளையிலுள் பக்கலினி
விரவா ரலங்கவர் செல்கவெற் பாபகல் வெம்பலரா
குரவா ரலங்கரித் துக்கொள்வர் நீயக் குறியறிந்தே. (௬௯)

குறியம ருங்கர வல்குற் கருங்குழற் கொவ்வைச்செவ்வாய்ச்
செறியம ருங்கர வுங்கவர் கண்ணியைத் தென்மயிலை
மறியம ருங்கர வள்ளால்வெற் பாவறை வாவெறிந்தா
ரறியம ருங்கா வம்பல வார்ப்ப வறுகணிந்தே. (௭௦)

அறுவத னந்தடங் கையடா திரண்டுடை யயற்கையன்
பறுவத னந்தனை பாகன் மயிலைப் பரமன்வெற்பிற்
சிறுவத னந்தரு வேன்சொல்க ளுணிந்தச் சென்மத்திலோ
வறுவத னந்தர சன்மத்தி லோவன்ப ரோடினியே. (௭௧)

ஓடம் படவட ருங்கட லேவடி வுற்றுரவாற்
றோடம் படவட நேர்வரி கூர்தடத் தூர்வளையே
நீடம் படவடம் பேர்மயி லைப்பர னெய்தலின்வே
ணீடம் படவட னேவந்து மன்பர் நினைந்திலரோ. (௭௨)

இலவும ருங்கற் பகற்கர்த்த கிள்ளையொத் தேன்கமுகும்
பலவும ருங்கற் பகநேர் மயிலைப் பரமன்வெற்பிற்
குலவும ருங்கற்ப மின்னேநின் போலென் குறைமறுத்துச்
சொலவும ருங்கற்ப ரேன்மட லூரத் துணிவனின்றே. (௭௩)

இன்றே னலம்புனத் தேந்திழை யைக்கண் டிடாமலயர்
கின்றே னலம்புனை கேட்டிலிர் போலுங் கிளத்துதிர்கா
மென்றே னலம்புகுஞ் சால்பாய் மயிலைமெய் யன்வரைமான்
கன்றே னலம்புகு குன்றே யவர்சென்ற கானெறியே. (௭௪)

கான்கண் டகமயிர் நோத்திரப்ப வெம்பரல் கால்பொது .
வான்கண்டகனனெனத்தோன்றருக்கன்மெய்வாட்டவெங்கண்
மான்கண் டகனொரு வன்பின் சுரஞ்சென்ற வாதையெவா
தான்கண் டகம்பி யார்மயி லைப்புனி தன்வளைக்கே. (எரு)

கேதப் படுகை மதியழற் கன்றிக் கெடுமதனன [வாய்
போதப் படுகை பொறுத்துய்யு மோகொன்றைப் போதருள்
சீதப் படுகைமிக் கோங்கு மயிலைநந் தேவமிக்கென்
றோதப் படுகை வலியமன் பார்க்கரு ளுத்தமனே. (எசு)

உத்த மனத்தி னணிதிகழ் தாமரை யோடைகளி
னித்த மனத்தின நீங்கா மயிலை நிமலன்றன்பால்
வைத்த மனத்தினன் மாதவ ருற்பவ மாற்றிவிதி .
யத்த மனத்தி னழியாப் பதம்பெற் றமர்வரனறே. (எஎ

அமரா வதியபி ராமமு நேரி லணிமயிலை
யமரா வதியரன் வெற்பிலிங் காறலைப் போருமரோ
லமரா வதியல் பலவேயன் றேன்மண் ணவர்முதலா
வமரா வதியரி லென்னே டெதிர்ப்பவ ராருளரோ. எஅ)

ஆர்க்கணி தானம் புலியோ டணியு மரன்மயிலை
யூர்க்கணி தானந் தனத்திடை நைத லொழிமனனே
பார்க்கணி தானம் பதியென் றடியும் படியுமிவர்
கூர்க்கணி தான முறைப்பது போலிமை கூடுமன்றே. (எகூ

கூடலை யாறு முடையாய் மயிலையிற் கோயில்கொண்டோய்
பீடலை யாறு படருஞ் சடில பெருமயலா
ணீடலை யாறுக மென்பா ளுணவையு நீத்தனளுன்
னூடலை யாறுக வொண்டொடியோடும்வந்தோன் றுகவே. (அ0

ஒன்று திருக்கு மனத்தா ரிடைகடை யூழியினும
பொன்று திருக்கும ரன்றனைக் காயுமெய்ப் போதுமியல்
குன்று திருச்கு முடிமீ திருக்குங் கொழுந்தளிர்சூழ்
மென்று திருக்கு மலர்க்கா மயிலையின் மெய்ப்பொருளே.(௮௧)

மெய்வாம னற்குன் றரிவைக்கு மாழி மிகவுமன்பு
செய்வாம னற்குங் கொடுத்தோன் மயிலையிற் றேமொழிநெய்
பெய்வாம னற்குன்ற வென்றுதல் போலும் பெருமயலால்
நய்வாம னற்குன் புணர்ச்சியெய் தாதென்று நான்சொல்வதே

நானத் திலகத்தி நங்குடிப் பேதையொர் நாயகன்பின்
கானத் திலகத்தி னீங்கிவந் தாள்செலக் கண்டதுண்டோ
தானத் திலகத்தி வென்றூர் மயிலைத் தடஞ்சிலம்பின்
மானத் திலகத்தி யன்போன் முக்கோல்கொண்ட மாதவரே.(௮௩)

மாதிடத் தானந் தகன்வீழ மோதினன் மாமயிலை
மூதிடத் தானந்த நாதன் பொருப்பின் முதுமறையோய்
சோதிடத் தானந் தவிப்பாறச் சொல்லுக சுற்றமல
ரோதிடத் தானந்த மீளியின் போயின ளொண்டிடவே. (௮௪)

இடங்கிடை யாதுயர் நீட்டக் கிழிதனி லெத்திழையி
னுடங்கிடை யாதுவ தில்லையின் றாரி நுதிபெரிதால்
விடங்கிடை யாகு மிடற்றூர்க் கிதுவென மெய்யர்மகச்
சடங்கிடை யாகுதி பெய்யு மயிலைத் தலத்தன்பனே. (௮௫)

அன்புடைக் கும்ப முனிபூசை கொண்டவ ரன்பருற்ற
துன்புடைக் கும்பர ஞாதென் மயிலைநந் தோகையினைத்
தன்புடைக் கும்ப முலைபொரச் சேர்த்துநத் தனதுகைவேல்
வன்புடைக் கும்பலை மாய்வித்த வேந்தை மருப்பகன்றே.(௮௬)

பெறுகுத லேக்கணி கம்பிரி யாது மனங்கிளர்ந்தான்
பெறுகுத லேக்கணி தம்பிற வாது பிறைமதியோ
தெறுகுத லேக்கணி வாய்க்கால் பெருகுந திருமயிலை
யறுகுத்த லேக்கணி வார்க்கெளி யேன்குறையார்சொல்வனே. (அஎ)

ஆரம் பரவும் புனைதென் மயிலையி லத்தனைபெந்
நேரம் பரவு மனமே நெறிகட நித்திலங்க
டாரம் பரவுந் திருக்கா விரிபடி தீருதியாங்
காரம் பரவுப காரஞ்செ யென்பயங் காலனுக்கே. (அஅ)

காலா னலங்கலை மாமதி பெய்யமெய் கன்றிமதன்
கோலா னலங்கலை யுந்தமி யேற்கணை கூற்றுவனகாண்
சூலா னலங்கலை நீர்மலர் மேய்வயல் சூழ்மயிலை
மேலா னலங்கலை மின்னே கொணர்தி விரைந்தெழுந்தே. (அகூ)

எழுமா தவனிக ராழிவை நாளு மிரந்தபதந்
தொழுமா தவனிடை வைத்தோன் மயிலையிற் றன்னிநெறி
கெழுமா தவனிலை நின்றுக்கு மன்றல் கிளர்கமலச்
செழுமா தவனி கலைமாது மூவருந் தேவியரே. (கூ0)

தேவருந் தானவ ரும்பணி தெய்வஞ் சிறையளிமென்
பூவருந் தானவ நாதம் பயில்பொழில் புக்குவெயிற்
சேவருந் தானவ சங்கொண் டுறங்கு மெழின்மயிலைக்
கோவருந் தானவ ளேப்கினைப் போர்மனக் கோயிலிலே. (கூக)

கோலத் துருவங் கொடுமா லகழ்ந்துங் குறிப்பரிதாய
ஞாலத் துருவங் கிரியார் மயிலை நகரணங்கே
சீலத் துருவன் றிசைத்துமங் காளைத் தேர்ந்துவிண்மின்
போலத் துருவம் பிரிந்தார்செ லென்றுபுலம்பலென்னே. (கூஉ

என்னகை மாலை யெழுப்பத் தழற்கிடை யிந்தனம்போன்
முன்னகை மாலை வருங்காண்பின் னுரு முளைமதிக்கென்
பொன்னகை மாலைக் கிடைகரும் பாமிதைப் போய்வண்டுகொள்
பன்னகை மாலை யணிமயி லைப்பரன் பாற்சொல்லுமே. (கரு)

சொல்லவ மானண்பர் சொன்னனெவனங்குத் தோன்றுமஞ்சைப்
பல்லவ மான்னை யன்னிகண் டஞ்சிப் பகரிலெனக்
கொல்லவ மானாரி னீமேறு முண்டுகொ லோட்டுதேர்
வல்லவ மானயர் தையா நணறயு மயிலையிலே. (கசு)

பிரமாய மாய உருந்தீர்த் தமைச்சு வடிவளித்தோ
பிச்சாய மாயாப் பேர்த்து மயிலையெம்மான்முன்வண்டே
பெயிர்க்காய மாய வழுப்பொங்கும் வேளம் புருவிச்சென்ற
மெயிற்காய மாயவும்போதுமென்றேதென்விதனத்தையே கூறு.

தனதடங் காட்டி யெனக்கடங் காமய றந்தென்முன்னே
மனதடங் காட்டியைப் போனின்ற வாறு மருங்கிளிபத்
தினதடங் காட்டிசை தாரார் மயிலை யெழில்வளைமே
வினதடங்காட்டில்விழிபுதைத்தோசொலுமென்கைகொண்டே

மென்பந் தனைய முலைச்சுளைபர்சொல் வியந்துறைவோ
ரின்பந் தனையன் மழலைச்சொ லென்றெண்ணி யெய்துவரோ
முன்பந் தனைய முனிந்தோன் மயிலையின் மூட்டுவித்த
வன்பந் தனையல தன்பணை யோவ வழக்கில்லையே. (கஎ)

இல்லத் தமருக வென்றெம ரெம்மையு மேனலையு
மெல்லத் தமருக மைப்பா ரிடுக்கண் விளைந்ததன்பா
னெல்லத் தமருக வில்லா மயிலைநித் தன்பலிக்குச்
செல்லத் தமருக மார்த்தோன் வளையிற் றினமுடனே. (கஅ)

உடலுளி யங்குயிர் போலுமன் பாலிவ ளோடுமெணங்
கிடலுளி யங்குலி சன்றூழ் மயிலையி லீசர்வெற்பின்
மடலுளி யங்குசப் பல்லுகிர் வேங்கை வருவதுகண்
டடலுளி யங்குமி றுங்காட் டிரவர லஞ்சுதுமே. (௯௯)

மேக முகந்தண்ட வோங்கிமென் பாளை விரித்தழகார்
மாக முகந்தண் டலைசூழ் மயிலைவள் ளற்பணிவோர்
நாக முகந்தண்ட கோளமெட் டும்புகழ் கண்ணி யெண்ணில்
போக முகந்தண்டர் கோனென வாழ்வரிப் பூதலத்தே. (௧௦௦)

## திருமயிலைத்திரிபந்தாதி முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

